6th March 1958]

தனியாக, திட்டுத் திட்டாக எடுப்பது சாத்தியமல்ல. ஆகவேதான் விஸ்தரிக்கும்போது சென்னை நகரத்தைச் சுற்றிலும், கன்னியாகுமரியைச் சுற்றிலும் வொர்க்ஷாப் அடிப்படையில் விஸ்தரிக்கப்படுகிறது.

Sri D. S. AUTHIMOOLAM : ஸார், பஸ்கள் எல்லாவற்றையும் தேசீய மயமாக்க ஏராளமான மூலதனம் தேவை என்று சொல்லப்படுவதால், அந்த மூலதனத்தைத் திரட்ட நம்முடைய ஜனங்களிடம் சொன்னால் லோன் மூலமாக இலகுவாக வசூல் பண்ணிவிட முடியும். அந்த முறையில் இந்திய சர்க்காரிடம் உத்திரவு வாங்கி அடுத்த வருஷத்திற்குள் எடுத்துக்கொள்ள அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

The Hon. Sri R. VENKATARAMAN : அடுத்த வருஷத்திற்குள் இயலாது. படிப்படியாகச் செய்து கொண்டு போனால்தான் நன்றாக திறமையாக நடத்த முடியும்.

Sri P. S. CHINNADURAI : ராஜ்ய முழுவதிலும் உள்ள பஸ் போக்குவரத்தை அரசாங்கம் எடுத்து நடத்த வேண்டுமானால் எவ்வளவு தொகை தேவைப்படும் என்று ஏதாவது புள்ளி விவரம் சர்க்கார் தயாரித்திருக்கிறார்களா ? இல்லையானால் அதற்கு ஏற்பாடுகளைச் செய்வார்களா ?

The Hon. Sri R. VENKATARAMAN : அதைப்பற்றி ஒரு தனிக் கேள்வி போட்டால் விவரங்கள் தயாரிக்கப்படும்.

Sri V. SANKARAN : மதுரையிலே சென்னை நகரத்தை விட நல்ல முறையிலே திருப்திகரமாக டவுன் பஸ் நடக்கிறது. அப்படியிருக்கும் நிலையிலே பொது மக்களுக்கு அதிருப்தியை உண்டாக்கும் வகையில் சர்க்கார் அதைத் தேசீய மயமாக்க மாட்டார்களல்லவா என்று அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri R. VENKATARAMAN : ஒவ்வொருவருக்கு தேச பக்தி யுண்டு. சிலருக்கு நாட்டு பக்தியுண்டு. நண்பருக்கும் நகர பக்தி இருக்கிறது. (சிரிப்பு.)

Sri K. ANBAZHAGAN : பஸ் போக்குவரத்தை நாட்டு உடைமையாக்குவதில் பக்கத்தில் தொழிற்சாலை இருக்கக் கூடியவைகளை மட்டும்தான் தேசீய மயமாக்க முடியும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். மிகப் பெரிய பஸ் கம்பெனிகளில் பழுது பார்க்கும் தொழில் நிலையத்துடன் இருக்கக்கூடியவைகளை அந்தத் தொழில் நிலையத்துடன் சேர்த்து நாட்டு உடைமையாக்க அரசாங்கம் முன்வருமா ?

The Hon. Sri R. VENKATARAMAN : ஸார், இதையெல்லாம் ஹைபாத்தெடிகல் க்வெஸ்டியன் என்று சொல்வார்கள்.

Mr. SPEAKER : The Hon. Minister need not answer it.

*Military College, Dehra Dun*

* 221 *Q.*—Sri M. P. SARATHI : Will the Hon. the Chief Minister be pleased to state the number of persons selected from this State for training at Dehra Dun Military College in 1956–57 and 1957–58?

The Hon. Sri C. SUBRAMANIAM : The particulars are given below :—

1956—Only one person was selected.

1957—Only one person was selected.

1958—Two persons were selected for the first term.

1-30 p.m. SRI S. M. ANNAMALAI : இந்த ராணுவக் கல்லூரிக்கு எந்த அடிப்படையில், எந்த விகிதாசாரத்தில் ஆள் எடுக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அங்கே தேர்ந்தெடுப்பதற்கு என்று ஒரு குழு இருக்கிறது. அவர்கள் தேர்ந்தெடுக்கிறார்கள்.

SRI M. P. SUBRAMANIAM : இந்திய ராணுவ சேவையிலே, குறிப்பாக, தமிழர்கள் திறமையுடன் சேவை செய்து வருவதாக அண்மையிலே பாராட்டப்பட்டது. காஷ்மீர் போர் முனையிலும் தமிழர்களின் திறமை பாராட்டப் பெற்றிருக்கிறது. அப்படியிருக்கும்போது, ஆண்டு ஒன்றுக்கு ஒருவர்தான் தேர்ந்தெடுக்கப்படுகிறார் என்றால், அது தமிழர்களில் திறமை பெற்றவர்கள் இல்லை யென்றா, அல்லது மாகாணத்திற்கு இவ்வளவுதான் என்று ஒதுக்கியிருக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது ஒரு பள்ளிக்கூடம். இதிலே படித்தவர்கள் மிலிட்டரியில் சேரவேண்டுமென்பது கிடையாது. நேராகவும் சேரலாம். கல்லூரியிலே இடம் குறைவாக இருக்கின்ற காரணத்தினாலே நம்முடைய ராஜ்யத்திற்கு ஒரு இடம்தான் கிடைத்திருக்கிறது. 1958-ல் இரண்டு கிடைத்திருக்கிறது.

SRI C. NATARAJA ODAYAR : இந்தக் கல்லூரிக்குத் தேர்ந்தெடுக்கும்போது, எந்த அடிப்படையில் தேர்ந்தெடுக்கிறார்கள் என்று கேட்பதன் அர்த்தம், அவர்களது யோக்கியதாம்சங்களை வைத்துக்கொண்டா, அல்லது ஜாதியின் அடிப்படையிலா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஜாதிப் பிரச்னையை ஒட்டியதாகத் தெரியவில்லை. இது நம்முடைய அரசாங்கத்தின் நிர்வாகத்தில் இல்லை. இதற்கு மேல் விஷயங்கள் வேண்டுமென்றால், அவர்களுக்கு எழுதித்தான் பதில் சொல்லவேண்டும்.

SRI M. KALYANASUNDARAM : ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் ஒரு ஆண்டுக்கு இவ்வளவு ஸ்தானங்கள் என்று இந்தக் கல்லூரியில் ஒதுக்குகிறார்களா ? அப்படியானால் நம்முடைய ராஜ்யத்திற்கு எவ்வளவு ஒதுக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது ஒதுக்கப்பட்டிருப்பது ராஜ்யத்தின் தேவைக்குப் போதுமானது என்று மந்திரி அவர்கள் அபிப்பிராயப்படுகிறார்களா ?

THE HON. SRI C. SUBRMANIAM : இது ராஜ்யத்தின் தேவைக்காக அல்ல, ராணுவத்தின் தேவைக்காக. முன்பு சொன்னது போல் இதற்கு விண்ணப்பம் போடுகிறவர்கள் மிகவும் குறைச்சல். பணக்காரர்கள்தான் போட முடியும். எந்த அடிப்படையில் ஸ்தானம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதற்கு என்னிடம் தகவல் இல்லை.

*Industrial Estate*

* 222 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the details regarding the Industrial Estate to be started at Tiruchirappalli; and

(*b*) when will it start functioning?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The Industrial Estate at Tiruchirappalli is estimated to involve an expenditure of about 6 lakhs and will provide built-up factory spaces for 12 Small